# பகவத் பாதை

Bagavath Path

தனிச்சுற்றுக்கு மட்டும் | இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு | 15-05-2013




நமது மன இயக்கத்தை எதிர்த்து நம்மால் எதுவும் செய்ய முடியாது என்பதை புரிந்து தோல்வியை ஏற்றுக் கொண்டு சரணடைவதே ஞானம்.

- ஸ்ரீ பகவத்



## நான் என்னும் மாயை?

- ஸ்ரீ பகவத்

'நான்' என்பது ஆன்மா என்று ஒரு சிலர் கூறுகின்றனர்.

'நான்' என்பது மாயை என்று இன்னும் சிலர் கூறுகின்றனர். இதில் எது உண்மை?

நான் என்பது மாயையா? அல்லது நான் என்பது சுத்தமான ஆன்மாவா?

நான் என்னும் உணர்வை நாம் எல்லோரும் உணர்ந்து கொண்டுதான் இருக்கிறோம்.

நான் என்பது மாயை என்று கூறுபவர்கள். "நான் என்ற உணர்வே இருக்கக்கூடாது; நான் என்ற உணர்விலிருந்து முழுமையாக விடுபடவேண்டும்" - என்று கூறிவிடுகிறார்கள்.

இரவில் நாம் ஓர் அறையில் உட்கார்ந்திருப்பதாக வைத்துக்கொள்வோம். விளக்கு இருப்பதால் அறையிலுள்ளவை அனைத்தும் நமக்குத் தெரிகிறது.

திடீரென மின் தடங்கல் ஏற்பட்டு விளக்குகள் அனைத்தும் அணைந்து விடுவதாக வைத்துக்கொள்வோம்.

வெளிச்சம் இல்லாததால் நாம் இருக்கும் அறை இருளில் மூழ்கிவிடுகிறது. இப்போது நம்மால் எதையும் பார்க்கமுடியாது. எதையுமே அறியமுடியாத நிலையில் நாம் இருந்தாலும்

நம்மை மட்டும் நம்மால் அறியாமல் இருக்கமுடியாது.

எதை வேண்டுமானாலும் நாம் அறியாதிருக்கலாம். ஆனால் நம்மை நாமே அறியாதிருக்க முடியாது.

கனவற்று ஆழ்ந்து தூங்கும்போதும், நினைவுகளற்ற தியானத்தின்போதும் மட்டுமே நாம் நம்மை அறியாதிருக்க முடியும்.

நமக்கு உணர்வு - உணர்ச்சிகள் எனும் அனுபவம் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் வரை நான் எனும் அனுபவம் நம்மை விட்டுப் போகாது.

"நான் எனும் அனுபவம் இல்லாமல் போய்விடவேண்டும்" என்பது கூட நான் என்னும் அனுபவத்தின் கோரிக்கையே ஆகும்.

அண்மையில் கோவையில் நடந்த கூட்டத்தின்போது அன்பர் ஒருவர் கேள்வி ஒன்றை எழுப்பினார்.

"நான் எனக்கு நானே போராடுவதில்லை. ஆனாலும் எனக்குள்ளே ஏதோ ஒரு நிறைவற்ற தன்மை இருந்துகொண்டிருக்கிறது. நான் சரியான நிலையில் இல்லையோ என்று தோன்றுகிறது. எனக்குள் என்ன நடந்து கொண்டிருக்கிறது? நான் என்ன செய்யவேண்டும்?"

இது பற்றி அவரிடம் விளக்கினோம். ஒவ்வொரு கணத்திலும் நமக்கு ஏதாவது ஓர் அனுபவம் - feeling - உணர்ச்சி, ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஏதாவது ஓர் உணர்ச்சி அனுபவமாகிக் கொண்டிருக்கிறது. சிலநேரம் மகிழ்ச்சி ஏற்படுகிறது; சிலநேரம் வருத்தம் ஏற்படுகிறது. சில சமயங்களில் விசேஷமான எந்த உணர்ச்சியுமற்ற மந்தமான - சலிப்புதட்டும் நிலைகூட அனுபவமாகிறது.

மகிழ்ச்சி ஏற்படும்போது நாம் நம்மை மறந்து விடுகிறோம். அந்த உணர்ச்சியோடு நாம் முழுமையாக இணைந்து கொள்கிறோம். நமக்கும் அந்த உணர்ச்சிக்கும் இடையில் எந்தப் போராட்டமும் இல்லை.

நாம் அந்த உணர்ச்சியுடன் எளிதாகப் பயணம் மேற்கொள்கிறோம்.

நமக்கு வருத்தமோ அல்லது சலிப்புதரும் உணர்வோ ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். இப்போது நாம் என்ன செய்கிறோம்?

அந்த உணர்விலிருந்து விடுபடவேண்டும் என எண்ணுகிறோம். அந்த உணர்வு மாறிவிட வேண்டும் என எண்ணுகிறோம்.

"உணர்ச்சிகள் அனைத்தும் தாமாக வந்து தாமாக மறைந்துவிடும்" என்பதை நாம் அறிந்திருந்தாலும் சில வேளைகளில் உணர்ச்சிகள் நம்மை விட்டு மறைவதில்லை.

"அனைத்து நிகழ்வுகளும் தாமாக நடக்கின்றன; நமக்கு அகத்திலோ புறத்திலோ எந்த செயலும் கிடையாது"

- இப்படி நாம் ஒரு முடிவுக்கு வந்தாலுங்கூட சில வேளைகளில் உணர்ச்சிகள் நம்மை விட்டு மறைவதில்லை.

ஏன்?

ஏன் நமது உணர்ச்சிகள் நம்மை விட்டு நீங்குவதில் தாமதம் ஏற்படுகின்றது?

நமக்கு எத்தனையோ உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. பயம் ஏற்படுகிறது; வருத்தம் ஏற்படுகிறது; பதட்டம் ஏற்படுகிறது.

அவை ஏற்படும்போது அவற்றிலிருந்து விடுபடவேண்டும் என்ற எண்ணமும் ஏற்படுகிறது.

ஒவ்வொரு உணர்ச்சியையும் அது நமக்கு ஏற்பட்ட உணர்ச்சியாக எண்ணிக் கொள்கிறோம்.

அது நம்மை விட்டுப்போய்விட வேண்டும் என விரும்புகிறோம்.

உணர்ச்சிகளை அனுபவிக்கும் அனுபவிப்பவனாக, நம்மை எண்ணிக்கொள்கிறோம்.

அந்த அனுபவிப்பவன், அனுபவத்திலிருந்து விடுபட எண்ணுகிறான்.

நம்மை அனுபவிப்பவனாக எடுத்துக்கொள்கிறோம். உணர்ச்சிகளை, நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளாக அனுபவமாக எடுத்துக்கொள்கிறோம்.

நாம் நமது உணர்ச்சிகளிலிருந்து விடுபடவேண்டும் என்பதையும் நம்மையறியாமல் விரும்பிவிடுகிறோம்.

நான் என்பது என்ன?

நான் என்று எவராவது இருக்கிறார்களா?

ஒவ்வொருவரும் நாம் இருப்பதாக;

'நான்' இருப்பதாக ஒவ்வொரு கணத்திலும் உணர்ந்துகொண்டுதான் இருக்கிறோம்.

அப்படி ஒரு 'நான்' உள்ளதா?

நான் யார்? நான் என்பது எது?

நமக்கு நாக்கு இருக்கிறது. அது உணர்ச்சியோடுதான் இருக்கிறது. அது உணர்ச்சியோடு இருந்தாலும், இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறது.

நாம் இனிப்பைச் சாப்பிட்டால் நமது நாக்கு இனிப்புணர்வாக மாறிவிடுகிறது. நாம் கசப்பைச் சாப்பிட்டால் நமது நாக்கு கசப்புணர்வாக மாறிவிடுகிறது.

நாம் நமது கையிலுள்ள ஆட்காட்டி விரலை எடுத்துக்கொள்வோம்.

நமது விரல், அதனளவில் எந்த உணர்வையும் வெளிக்காட்டுவதில்லை.

நாம் நமது விரலால் மேஜையைத் தொடுவதாக வைத்துக்கொள்வோம். மேஜையைத் தொடுவதன் மூலம் மேஜையைத் தொட்டு உணர்கிறோம்.

அடுத்ததாக நாம் அதே விரலைக் கொண்டு தண்ணீரைத் தொடுகிறோம். விரலின்மூலம் தண்ணீரை உணர்கிறோம்.

இப்போது நாம் என்ன உணர்கிறோம்?

விரலுக்கென்று தனிப்பட்ட முறையில் எந்த உணர்வும் கிடையாது. எதைத் தொடுகிறோமோ அதை மட்டுமே அறிகிறோம்.

மேஜையைத் தொடும்போது, மேஜையை உணர்கிறோமா? அல்லது விரலை உணர்கிறோமா?

தண்ணீரைத் தொடும்போது தண்ணீரை உணர்கிறோமா? அல்லது விரலை உணர்கிறோமா?

நாம் எதைத் தொடுகிறோமோ, அது சம்பந்தமான உணர்வு ஏற்படுகிறது.

மேஜையைத் தொடும்போது மேஜையை நாம் உணர்வதில்லை. மேஜையைத் தொடுவதால் நமது விரலில் ஏற்பட்ட உணர்வைத்தான் உணர்கிறோம்.

தண்ணீரைத் தொடும்போது தண்ணீரை நாம் உணர்வதில்லை. தண்ணீர் நமது விரலில் ஏற்படுத்திய உணர்ச்சியை மட்டுமே உணர்கிறோம்.

ஆனால் நாம் மேஜையை உணர்வதாகவும், தண்ணீரை உணர்வதாகவும் மட்டுமே - நாம் புரிந்து கொள்கிறோம்.

இவ்வாறு தான் நமது மன இயக்கமும் உள்ளது.

நம் மனதிலுள்ள உணர்வு நிலைக்கு - consciousness க்கு எந்தவிதமான உணர்ச்சி வெளிப்பாடும் கிடையாது.

நமது மன உணர்வும், விரலைப்போல் உணர்வற்றுதான் உள்ளது. பயம், வருத்தம் போன்ற உணர்ச்சிகள் ஏற்படும்போதுதான் நம் மனதின் உணர்வுநிலை ஏதாவது ஓர் உணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.

- ஏதாவது ஓர் உணர்ச்சியாக மாறிவிடுகிறது.

மேஜையை அறிவதும் விரலை அறிவதும் வேறுவேறு அல்ல. அதுபோல் தண்ணீரை அறிவதும், விரலை அறிவதும் வேறுவேறு அல்ல.

விரலால் தண்ணீரை அறிவதாக எண்ணிக் கொள்வதைப்போல்

நமது மன உணர்வால் - consciousness ஆல் - பயத்தை உணர்ந்து அறிவதாக எண்ணிக் கொள்கிறோம்.

உண்மையில் அங்கே ஒரே ஒரு அனுபவம் மட்டுமே உள்ளது.

பயம் அல்லது வருத்தம் என்னும் உணர்ச்சி மட்டுமே உள்ளது. அனுபவம் மட்டுமே உள்ளது.

ஆனால் அது இரண்டு தன்மை உள்ளதாகத் தோன்றுகின்றது.

"நான் பயத்தை உணர்கிறேன்"

"நான் வருத்தத்தை உணர்கிறேன்"

- இப்படி நமக்குத் தோன்றுகிறது.

நாம் வருத்தத்திலிருந்து விடுபட விரும்புவதானது

வருத்தமே வருத்தத்திலிருந்து விடுபட எண்ணுவதைப் போன்றதாகும்.

- நானே என்னிலிருந்து விடுபட எண்ணுவதைப் போன்றதாகும். இது சாத்தியமற்ற ஒன்று.

நாக்கே நாக்கிலிருந்து விடுபட முடியுமா?

அனுபவங்கள் அனைத்தும் அனுபவிப்பவனோடு சேர்ந்தே இருக்கிறது; பிரிவில்லாமலேயே இருக்கிறது.

-ஆனால் பிரிந்திருப்பதைப் போன்ற தோற்றத்தை மட்டும் கொடுக்கிறது.

அனுபவம் ஏற்படும்போது தான், அனுபவிப்பவனே ஏற்படுகிறான்.

மற்றபடி அனுபவிப்பவன் என்று எவரும் கிடையாது.

- நான் என்று எவரும் கிடையாது.

நான் எனும் உணர்வு நமக்கு இருப்பதாகத் தோன்றினாலும் சரி, அனுபவிப்பவன் என்ற உணர்வு நமக்கு இருப்பதாகத் தோன்றினாலும் சரி.

- ஏதோ ஓர் அனுபவம் அங்கே நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பது தான் பொருள்.

எல்லா உணர்ச்சிகளும் தாமாகத் தோன்றி தாமாகவே மறைந்து விடுகின்றன என்பதைப் பார்த்தோம்.

உணர்ச்சிகளை அப்புறப்படுத்த நாம் எதுவுமே செய்யத்தேவையில்லை.

அவற்றின் சுதந்திரமான இயக்கத்தில் நாம் குறுக்கிடாமல் இருந்தால் மட்டும் போதும்.

உணர்ச்சிகள் என்னும் அனுபவத்தின் இயக்கத்துக்கு முழுச் சுதந்திரம் கொடுப்பது என்பது

அனுபவிப்பவனுடைய இயக்கத்துக்கும் முழுச் சுதந்திரம் கொடுப்பதுவேயாகும்.

அனுபவிப்பவனுக்குக் கொடுக்கும் சுதந்திரமே அனுபவத்துக்குக் கொடுக்கும் சுதந்திரம் ஆகும்.

அனுபவிப்பவனுக்குக் கொடுக்கும் சுதந்திரம் என்றால் என்ன?

அனுபவிப்பவன் எப்போதும் அனுபவத்திலிருந்து - அச்சம், கவலையிலிருந்து விடுபடவேண்டுமென்பதையே விருப்பமாகக் கொண்டுள்ளான். அவனையறியாமல் அவன் இவ்வாறு நடந்து கொள்கிறான்.

தன்னுடைய பயத்திலிருந்து விடுபட அவன் அறிந்தே முயன்றாலும் சரி, அல்லது அறியாமல் முயன்றாலும் சரி.

"அவன் எப்படி வேண்டுமானாலும் செயல்பட்டுவிட்டுப்போகட்டும்" என அவனுக்கு முழுச் சுதந்திரம் கொடுப்பதே அவனுடைய இயக்கத்துக்கு சுதந்திரம் கொடுப்பதாகும்.

அனுபவிப்பவனுடைய இயக்கத்துக்கு சுதந்திரம் கொடுப்பதென்பது "அவனுடைய அனைத்துச் செயல்களும் இயற்கையானதே. அவன் அறிவோடு செயல்பட்டாலும் சரி; அறிவில்லாமல் செயல்பட்டாலும் சரி; அவன் திட்டமிட்டு செயல்பட்டாலும் சரி; திட்டமிடாமல் செயல்பட்டாலும் சரி; அவன் அக உணர்ச்சிகளை நிர்வாகம் செய்ய முயன்றாலும் சரி அல்லது புற நிகழ்வுகளை நிர்வாகம் செய்ய முயன்றாலும் சரி; அவனுடைய இயக்கம் இயற்கையானதே"

- என்று எடுத்துக்கொள்வதே.

அனுபவிப்பவன் சுதந்திரம் அடைவது என்பதுதான் அனுபவங்கள் சுதந்திரமடைவதும்

- உணர்ச்சிகள் சுதந்திரமடைவதும் ஆகும்.

நமது அக இயக்கத்துக்கு எந்த நெருக்கடியையும் கொடுக்காது அதற்கு முழுச் சுதந்திரம் கொடுக்கும்போது

- அக உணர்வுகள் யாவும் மலர்வடைகின்றன.

நான் என்பது தவறானதல்ல; அனுபவிப்பவனின் முயற்சிகள் தவறானவை அல்ல. - அவை அனைத்தும் இயல்பானவை; இயற்கையானவை.

இப்படி நாம் அதற்கு முழுச் சுதந்திரம் வழங்கி அதன் இயக்கத்துக்கு இடையூறு செய்திடாமல் இருந்திடும்போது

- நான் என்பதும் பிரவாகத்தின் பகுதியாகி விடுகின்றது. நான் அற்ற நிலைவேண்டும் எனப் பெரியவர்கள் கூறுவது இதனையே.

நான் என்பது பிரவாகமாக இருக்கும் நிலையே

அனுபவங்கள் அனைத்தும் பிரவாகமாக இருக்கும் நிலையே உணர்ச்சிகள் அனைத்தும் பிரவாகமாக இருக்கும் நிலையே

- நான் அற்ற நிலையாகும். நான் அற்ற நிலை என்பது செயலற்று முடங்கிப்போன நிலையல்ல.

அங்கே நாம் செயல்படவும் செயல்படலாம். ★

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் புதிய நூலான "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" எனும் நூலைப் படித்த பல அன்பர்கள் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்ததோடு தங்களின் தெளிவு முடிச்சில் ஏற்பட்ட உறுதிபாட்டினையும் தெரிவித்து நமது பாதைக்கு கடிதங்கள் அனுப்பியுள்ளார்கள். அவற்றை நம் பாதையில் பயணிக்கும் அனைவரோடும் பகிர்ந்துகொள்வது பயனுள்ளதாக இருக்கும் என நினைக்கிறேன். எனவே தொடர்ந்து வரும் கடிதங்களை பாதையில் வெளியிட இருக்கின்றோம்.

சில அன்பர்கள் தங்களுக்கு பகவத் பாதை சில மாதங்கள் வர தவறிவிட்டது என்றும் காலதாமதமாக வருகின்றது என்றும் தெரிவித்திருந்தார்கள். நாம் பாதை அனுப்பும்போது ஒவ்வொரு முகவரிக்கு மேலேயும் அந்த முகவரிக்கு உண்டான சந்தா எண் குறிப்பிடப்பட்டு இருக்கும். அந்த எண்ணை குறிப்பிட்டு தங்களது குறைகளை SMS மூலமாகவோ (அ) நேரடியாக 9789165555, 9994205880 என்ற எண்களுக்கு தொடர்பு கொண்டோ தெரிவிக்க வேண்டுகிறோம்.

பாதை அனைவருக்கும் தவறாமல் கிடைக்கவேண்டும் என்பதோடு அல்லாமல் தேவையும் தேடுதலும் கொண்ட புதிய அன்பர்கள் அனைவருக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்பதே நமது லட்சியம். அதற்கு இப்பாதையில் பயணிக்கும் நம் அனைவரின் ஆதரவும் தேவைப்படுகிறது. எனவே தங்களுடைய நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் பகவத் பாதையின் பயனை தெரிவித்து அவர்களும் பயன்பெற உதவுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் நமது பகவத் மிஷனுக்கு நன்கொடை வழங்கிய ஆர்வலர்களில் சிலர் பகவத் மிஷனுக்கு வழங்கும் நன்கொடைகளை ஐயாவின் தனிப்பட்ட வங்கிக் கணக்கில் செலுத்துவதற்கு விருப்பம் தெரிவித்ததால் அவருக்குத் தனிப்பட்ட (Personal) வங்கிக் கணக்கு எண் தொடங்கப்பட்டு உள்ளது. எனவே நேரடியாக ஐயாவிற்கு நன்கொடை வழங்கும் விருப்பமுள்ளவர்கள் செல் : 9789165555 என்ற எண்ணிற்கு தொடர்பு கொண்டு வங்கி கணக்கு எண்ணை பெற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

அன்புடன்,

**K.S. ஜீவமணி,** ஆசிரியர்,

செல் : 97891-65555

# சேலம் முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் சிந்தனையில் ஈடுபாடு கொண்டவர்கள் அனைவரும் ஒரே இடத்தில் சந்தித்து தங்களது தெளிவினை உறுதி செய்து கொள்ளும் வகையில் ஐந்து நாட்கள் முகாம் சேலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது சேலத்திலிருந்து சென்னை பைபாஸ் வழியில் உள்ள பெரியகவுண்டாபுரம் அருகில் கொடம்பக்காடு பகுதியில் அமைந்துள்ள மலை அடிவாரத்தில் இயற்கை சூழல் கொண்ட தோட்டத்தில் நடைபெற உள்ளது.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனி இடவசதி உண்டு. 14 வயது பூர்த்தியானவர்கள் மட்டுமே பங்கு பெறலாம்.

ஆண்கள் தங்குவதற்கு ஒரு கூடமும், பெண்கள் தங்குவதற்குத் தனியான கூடமும் (Enclosed Hall) மட்டுமே உள்ளன. தனி அறைகள் கிடையாது. தேவையான குளியலறைகள் உள்ளன.

முகாம் 15-8-2013 காலை 7-00 மணிமுதல் 19-8-2013 மதியம் 1-00 மணிவரை நடைபெறும்.

ஆகஸ்ட் 15, 16 ஆகிய இரண்டு நாட்களும் சொற்பொழிவு மற்றும் கலந்துரையாடல்கள் நடைபெறும். பங்கு பெறுபவர்கள் அனைவரும் இவற்றில் கலந்து கொள்ளலாம்.

ஆகஸ்ட் 17, 18 ஆகிய இரண்டு தினங்களிலும் தேர்வு செய்யப்பட்டவர்கள் மட்டுமே தங்கி பங்கு பெற முடியும்.

இந்த இரண்டு நாட்களிலும் பங்கு பெறுபவர்கள் மௌனத்தை மட்டுமே கடைபிடிக்கவேண்டும். ஏறக்குறைய விபாசனா தியான முகாம்களின் நடைமுறைகள் இந்த இரண்டு நாட்களிலும் கடைப்பிடிக்கப்படும்.

ஆகஸ்ட் 19-ம் தேதி கலந்துரையாடல்கள் மட்டும் நடைபெறும். அன்று அனைவரும் பங்கு பெறலாம்.

முகாம் கட்டணம் எதுவும் கிடையாது.

உணவுக்கான செலவுகளை பங்கு பெறுபவர்களே பிரித்துக்கொள்ளலாம். உத்தேசமாக நபர் ஒருவருக்கு நாள் ஒன்றுக்கு ரூ.150 வரை இருக்கலாம்.

பயன் பெறுபவர்கள் தாராளமாக நன்கொடை வழங்கும்பட்சத்தில் அடுத்து வரும் முகாம்களை இலவசமாக நடத்துவதற்கு உதவியாக இருக்கும்.

சேலம் பஸ் நிலையத்திலிருந்து முகாம் நடக்கும் தோட்டம் வரை வந்து செல்ல வாகன வசதி செய்யப்பட்டுள்ளது.

ஐந்து நாட்களிலும் ஸ்ரீ பகவத் ஐயாவும், தேனி சுவாமிகளும் கலந்து கொள்வார்கள்.

பங்கு பெறுபவர்கள் விண்ணப்பத்தின்பேரில் மட்டுமே தேர்வு செய்யப்படுவார்கள்.

இந்த முகாமிற்கு விண்ணப்பித்தும் தேர்வு செய்யப்படாதவர்களுக்கு அடுத்தமுகாமிற்கு முன்னுரிமை வழங்கப்படும்.

இத்துடன் பிரசுரமாகியுள்ள படிவத்தையே விண்ணப்ப படிவமாக வைத்துக்கொள்ளலாம். தேவைப்படுபவர்கள் இதனை ஜெராக்ஸ் செய்துகொள்ளலாம். விண்ணப்பம் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : 30-6-2013

## சேலம் முகாம் - விண்ணப்பம்

எனது பெயர், வயது மற்றும் முகவரி..............................

..............................

தொலைபேசி & மெயில் ID..............................

பங்கு பெற விரும்பும் தேதிகள் : 15 & 16 [ ] 17 & 18 [ ] 19 [ ]

என்னைத் தேர்வு செய்யக்கோரும் செய்வதற்கான சிறப்புக் காரணங்கள் :

..............................

..............................

முகாம் பற்றிய முழு விபரங்களை அறிந்து கொண்டேன். அதில் பங்குபெற எனக்கு அனுமதி வழங்க வேண்டுகிறேன்.

நாள் :

கையொப்பம்

---

## அலுவலகக் குறிப்புக்கு மட்டும்

## தன்னை அறியும் ஞானம் - திருச்சியில்

பகவத் பாதை வாசகர்களுக்கு,

திருச்சியிலிருந்து சரண்குமார் எழுதுவது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ரெயிலில் திருச்சி வந்துகொண்டு இருப்பதாகவும், நேரில் சென்று ஆவன செய்யுமாறு திரு.ஜீவமணி அவர்கள் கேட்டுக்கொண்டார். என்னுடைய நண்பர் திரு. சதீஷ்குமார் மற்றும் திரு. பயாஸ் அவர்களும் இம்முறை "ஐயாவுடன் இருந்து அவருக்கு வேண்டிய பணிகளை நாங்கள் செய்கிறோம். எங்களுக்கு ஒரு வாய்ப்பு கொடுங்கள்" என்றார்கள். இது தான் உண்மையான கர்மயோகம். இரவு 7-30 மணிக்கு Train ஜங்சனிற்கு வந்தது. நாங்கள் 1 மணிநேரம் முன்னதாகவே கிளம்பினோம். எண்ணங்களில் ஏற்படும் Traffic ஐ சமாளித்து விடலாம். செல்லும் வழியில் ஏற்படும் Traffic னால் சற்று தாமதமாகிவிட்டது. ஐயா அவர்கள் லக்கேஜை வைத்துக்கொண்டு சிரமப்பட்டுக் கொண்டு இருப்பாரே; அதுவும் மூன்றாவது பிளாட்பார்ம் வேறு என்று மனம் கிடந்து அடித்துக்கொண்டு இருந்தது. ஒரு வழியாக ஸ்டேஷனுக்குள் நாங்கள் நுழைய Entrance லேயே ஐயா அவர்கள் எங்களுக்காக காத்துக்கொண்டு இருந்தார். எங்களுக்குத்தான் பதட்டம். பகவத் ஐயா அவர்களோ casual ஆக இருந்தார். நான் அவரிடம் ஐயா! கால்டாக்சி வர உள்ளது. அதில் போய்விடலாம் என்றேன். அதற்கு அவர் "எதற்கு டாக்சி? அருகில் இருந்தால் நடந்தே போய்விடலாமே என்றார். அவருடைய ஒவ்வொரு செயலிலும் எளிமை வெளிப்பட்டுக் கொண்டே இருந்தது. பிறகு டாக்சி வர ஐயாவை நண்பர் சதீஷ் அவர்கள் ஐயா தங்குமிடத்திற்கு அழைத்துச் சென்றார். நாங்கள் எங்கள் வண்டிகளில் பின் தொடர்ந்தோம். இந்த நேரத்தில் மீட்டிங்கை ஏற்பாடு செய்த ஜெகதாம்பாளும், ஜெம்புலிங்கம் ஐயா அவர்களும் அங்கு வந்து சேர்ந்தார்கள். சிற்றுண்டிக்குப் பிறகு ஐயா அவர்கள் ஓய்வெடுத்தார்கள்.

மறுநாள் 1-5-2013 அன்று காலை 10-00 மணிக்கு 'தன்னையறியும் ஞானம்' என்ற தலைப்பில் ஐயா பேசுவதற்கு ஆயத்தமாக இருந்தார். 1/2 மணி நேரத்திற்கு முன்னரே பகவத் ஐயா அவர்கள் அரண்மனை தவமையத்திற்கு வந்து சேர்ந்தார். வரவேற்புரையாக திரு. R.S ஜம்புலிங்கம் அவர்கள் உலகநல வாழ்த்துடனும், தவத்துடனும் கூட்டத்தினை தொடங்கி வைத்தார். மனவளக்கலை மன்றத்தினரின் தவ ஆற்றலால் அந்த இடமே நல்ல அதிர்வலைகளால் நிறைந்து இருந்தது. பின்னர் ஐயா அவர்கள் பேசத் தொடங்க அனைவரும் மௌனத்தில் ஆழ்ந்தனர். ஒரு மணி நேரத்திற்கு பிறகு 10 நிமிடம் இடைவேளை விடப்பட்டது. அப்பொழுது மனவளக்கலை மன்றத்தினைச் சேர்ந்த சகோதரி அருள்நிதி. ரேவதி அவர்கள் சுவையான குளிர்பானம் ஒன்றினைத் தயாரித்து அனைவருக்கும் அன்புடன் வழங்கினார். (அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்) அனைவரும் அருந்தி மகிழ்ந்தோம்.

பின்னர் கேள்வி - பதில் session தொடங்கியது. ஐயாவின் பதில்களால் பலரும் தெளிவடைந்தனர். இறுதியாக மனவளக்கலை மன்ற துணைப் பேராசிரியர் T.R.நவநீதம் ஐயா அவர்களின் நன்றி உரையுடன் கூட்டம் இனிதே நிறைவடைந்தது.

நமது அழைப்பிற்கிணங்க கூட்டத்திற்கு வந்து பெருமை சேர்த்த விஜய் லாட்ஜ் உரிமையாளர் திரு. A.S. சுந்தரம், நவிலு மார்பிள்ஸ் மெய்திரு. சுப்ரமணியன், அசிஸ்டெண்ட் கமிஷனர் திரு. சேகர் (ஓய்வு, மாநகராட்சி) Lawyer மோகன் மற்றும் Lawyer ஜெயபால், BSNL பிரேமா ஜீவானந்தம், புத்தக ஸ்டாலில் உதவிய நண்பர்கள் LIC ஸ்ரீராம், Online Gold சுரேஷ், நாட்ராய குமார், ரஞ்சித்குமார், வெங்கடாஜலம் ஆகியோருக்கும், ஐயாவை புகைப்படம் எடுத்து Sponsor செய்த திரு. சுதாகர் மற்றும் அவர்தம் நண்பர் ஆகியோருக்கும் ஸ்ரீ பகவத்மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## "ஞான வாழ்வின் நடைமுறை யாதார்த்தங்கள்"

### - நூலைப்பற்றி கடிதம்

மதிப்பிற்குரிய பகவத் ஐயா அவர்களுக்கு,

வணக்கம். தங்களுடைய சமீபத்திய நூலான "ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" கிடைக்கப் பெற்றேன். இதுவரை வெளிவந்த எல்லா நூல்களும் எல்லோரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற நோக்கில் வெளியானவை. அப்படித்தான் உலகம் முழுவதும் எழுதப்படும் நூல்கள் வெளிவருகின்றன. எனகுத் தெரிந்து முதல் முறையாகச் சில கட்டுப்பாடுகளை விதித்து, தெளிவடைந்த நபர்களுக்காக எழுதப்பட்ட நூல் இது ஒன்றுதான் என்று கருதுகிறேன். தெளிவடைந்த ஒரு கூட்டத்திற்காக எழுதப்படும் முதல் நூலாகவும் ஆன்மீக வரலாற்றில் இது திகழ்கிறது.

கற்றுத்தரப்படும் விஷயம் எளிமையாக இருக்கவேண்டும். ஆனால் அது மலிவாகப் போய்விடக்கூடாது என்று சில நேரங்களில் சில கட்டுப்பாடுகள் ஆன்மீகக் கல்வியில் விதிக்கப்படுவதுண்டு. ஆனால் சில விஷயங்கள் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டால் இதுவரை குருக்களாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பல நபர்களையும், ஞானத்தெளிவு பெற்றவர்களின் நடைமுறைகளையும் பொது மக்கள் தவறாகப் புரிந்து கொள்ளக்கூடும் என்பதற்காக சில வரைமுறைகளுக்கு உட்படுத்தப்பட்டுள்ளதைப் புரிந்துகொள்கிறேன். முழுமையாக ஏற்கிறேன்.

ஆன்மீக உலகில் இரண்டு குழப்பங்கள் நிலவுகின்றன.

1. அகத்தை – புறம் போலப் பிரம்மாண்டப் படுத்துதல்

2. புறத்தை – அகம் போல விதிமுறைகளற்றதாக மாற்றுதல்

இதுவரை மக்களுக்கு வழிகாட்ட வந்த குருமார்கள் தாங்கள் உணர்ந்ததைப் பிரம்மாண்டப்படுத்தி, கற்பனையான அவதானிப்புகளை விட்டுச் சென்றிருக்கிறார்கள். ஒரு இஸ்லாமியக் குரு இப்படிச் சொல்வார் "எதைப் பார்த்து நீ ஆச்சரியப்படுகிறாயோ அது உனக்குக் கிடைக்காது". ஆன்மீக உயர்வை (உயர்வு என்று சொல்லும் போதே சிக்கல் ஆரம்பமாகி விடுகிறது) ஒரு அற்புத உலகம் போல மாயா ஜால உலகம் போலக் குருக்கள் உருவாக்குகிறார்கள். தெளிவு என்பது சராசரி மனிதன் அடைய முடியாத ஒன்றாகக் கருதுமளவிற்கு அந்நியமாகிப் போகிறது இத்தகைய விவரணைகளால்.

தெளிவு பெற்ற ஒரு நபர் அவர் கற்ற அனைத்தையும் விவரிக்கும் போது ஆன்மீக உயர்வின் மூலம் அந்த அறிவைப் பெற்றதாக ஒரு கற்பனையான முடிவைச் சீடர்களிடம் விட்டுச் செல்ல நேர்கிறது. அது இல்லாத ஊரை மனதளவில் கட்டியெழுப்புகிறது. நம் குழந்தைகள் நார்நியா படம் பார்த்துவிட்டு, அங்கே போகவேண்டும் என்று அடம்பிடிப்பதைப் போன்று ஓர் ஆன்ம சாதகர் தன் கற்பனை ஊரைத் தேடிக்கொண்டே இருக்கிறார்.

என்னிடமும் நிறைய நபர்கள் கூடி அப்படியான ஊர்களைக் கட்டியெழுப்பியிருந்தார்கள். இதில் என்ன பிரச்சினை என்றால் ஒருவர் கூறிய ஊர் இன்னொருவர் கூறும் ஊரைப் போல இல்லை. நான் எந்த ஊருக்குப் போவது என்பதே பெரும் போராட்டமாக மாறியது. புற முடிவுகளின் (குருமார்களின் பிரதாபங்களின்) அடிப்படையில் ஒரு ஊரைத் தேர்வு செய்தாலும் அங்குப் போக வழியை எப்படிக் கண்டுபிடிப்பது? நான் போகவேண்டிய ஊரைக் கற்பனையில் மட்டுமே என்னால் அடைய முடியும் என்று ஒரு வழியாக விளங்கியது. உங்கள் எழுத்துகளின் விளைவால் இல்லாத ஊருக்கு வழி தேடிய கதை முடிவுக்கு வந்தது. அடைய வேண்டிய ஊரே நான் இருக்கிற ஊர்தான். இல்லாத ஊர்களைத் தேடி அலைந்ததால் சொந்த ஊரையே தேடவேண்டியதாகிவிட்டது.

அதேபோல குருமார்களின் பிரம்மாண்டத்தால் அசந்து நிற்கும் சீடன் அவர்கள் பற்றிய குற்றச்சாட்டுகளால் சிதைந்து போகிறான். ஒரு தெளிவடைந்த நபர் குற்றவுணர்ச்சியற்ற நிலையை உலகின் பாதிப்புகளைச் சமமாகப் பாவிக்கும் நிலையைப் பெற்றுவிடுவதால் அவர் புற உலகை – அதன் சட்டத் திட்டங்களை மீறுகிறார். அகம் நம்முடைய ஒழுங்குகளுக்கு அப்பாற்பட்டது என்று புரிந்த பிறகு, அந்த முடிவைப் புற உலகில் பிரதிப்பலிப்பது பின்பற்றுபவர்களை மேலும் சிக்கலாக்குகிறது.

இந்த இரண்டு போக்குகளுமே ஆன்மீக உலகில் புதிய தேடலாளர்களைக் குழப்புகிற அம்சங்கள். தெளிவடைந்தவர்கள் குழம்புகிற விஷயங்கள். இவை இரண்டையும் அறிவுரையாக இன்றி நூலில் பகிர்ந்து கொண்ட விதம் அருமையாக இருக்கிறது. நீங்கள் என்ன நோக்கத்தோடு இந்த நூலை எழுதினீர்களோ அந்த நோக்கம் நிச்சயமாக நிறைவேறும் என்று தோன்றுகிறது.

ஒவ்வொரு தெளிவடைந்த குருவும் தான் தெளிவடைந்த அதே வழியைத் தன் சீடர்களுக்கு கற்றுத்தருவதில்லை. இப்படிச்செய்தால், இந்த வகைப் பயிற்சிகளைச் செய்தால் நாம் பெற்ற தெளிவைப் பெறுவார்கள் என்ற அனுமானத்தின் அடிப்படையிலேயே பலவற்றைக் கற்றுத்தருகிறார்கள். தாங்கள் வந்த வழி எதுவென எல்லோராலும் கண்டுபிடிக்க இயல்வதில்லை. அதைப் போன்ற இன்னொரு வழியை உருவாக்கிவிடுகிறார்கள். ஒரு தெளிவடைந்தவர் எப்படித் தன் புறத்தை அமைத்துக் கொள்ளவேண்டும் என்பதை நூல் தெளிவாக விளக்குகிறது.

இயல்பாகவே உங்கள் எழுத்து நடை ஆற்றொழுக்கான மனப் பிரவாகத்தை நினைவுபடுத்துவதாக இருக்கும். அதிலும் இந்த நூலின் நடை இன்னும் எளிமையாக, துல்லியமான நீரோடையைப் போலச் சீற்றத்தோடு ஓடுகிறது. நூல் என் கையில் கிடைத்த போது நான் சேலத்தில் இருந்து கம்பத்திற்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன். கார் பயணத்தின் போது சுமார் நான்கு மணி நேரத்தில் வாசித்து முடித்தேன். சில அத்தியாயங்களை இருமுறை வாசிக்கவும் நேர்ந்தது. இப்படி வாசிக்க முடிந்ததற்கு இரண்டு காரணங்கள். ஒன்று நூலின் நடை; இரண்டு நூலில் பயன்படுத்தப்பட்டிருக்கும் எழுத்துகளின் அளவு. அருமையான கட்டமைப்புடன் நூல் வெளிவந்திருக்கிறது. நூலின் உள்ளே நாம் கலந்துரையாடும் விஷயத்திற்கேற்ப உள்ளடக்கம் ஓட்டத்தோடும், வடிவமைப்பு ஒழுக்கமைவோடும் வெளிவந்ததுள்ளது.

நூலில் இருந்து நான் உட்கிரகித்த கருத்துகளை வரிக்கு வரி பட்டியல் போடுமளவிற்கு எனக்குள் அவை மறுபடியும் மறுபடியும் சுழன்றபடி இருக்கின்றன. தமிழில் உணர்வுகள் – உணர்ச்சிகள் என்ற இரண்டு வார்த்தைகளை அக்குபங்சர் மருத்துவத்தின் அடிப்படையில் நான் புரிந்து கொள்ள நேர்ந்தது.

உணர்வுகள் என்பவை நம் இயல்பிலிருந்து உருவாகின்றன. அவை அகம் சார்ந்தவை. நம்மால் மாற்ற இயலாதவை. அவற்றை சரி செய்ய முயன்றால் போராட்டமாகிவிடுகிறது. உணர்வுகள் தோன்றுவதற்கு நாம் காரணமில்லை என்று புரிந்து கொண்ட நிலையில் அவற்றிலிருந்து விடுபட்ட நிலை வந்துவிடுகிறது. உணர்வுகளோடு நாம் போராடும்போது அவை உணர்ச்சிகளாக மாறி நம் கட்டுப்பாட்டையும் மீறி ஆட்சி செய்கின்றன. இந்தப் புரிதலை உங்களின் "ஞான விடுதலை", "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" நூல்கள் மூலம் பெற்றேன்.

நம்முடைய அகம் என்பது ஒரு சுழலும் பற்சக்கரம். புறம் என்பது அகத்தை விட வேகமாகச் சுழலவல்ல இன்னொரு பற்சக்கரம். ஆனால் இரண்டும் தனித்தனியாகவே இயங்குகின்றன என்பதைப் புரிந்துகொள்ளும் போது அகத்தின் சுழற்சி ஒரு தகவலாகவே இருக்கிறது. புறத்தை, அகத்தோடு இணைத்து அதன் வேகத்தை அதிகரிக்கவும் செய்யலாம். அகத்தின் சுழற்சியை வெறுமனே பார்த்துக்கொண்டும் இருக்கலாம் என்ற சுதந்திரத்தை உங்கள் நூல்களின் வழியாக உணர முடிந்தது. எப்போதும் ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாது என்று சொல்வார்கள். ஆனால் ஒரு புத்தகம் புரிதலையும், விடுதலையையும் தர முடியும் என்பதை உங்கள் நூல்கள் நிரூபித்துவிட்டன.

மன இயக்கம் பற்றி தெளிவடைந்த நபர்கள் இன்னொரு விஷயத்தைப் பற்றியும் புரிந்துகொள்ள வேண்டும் என்று தோன்றுகிறது. அவரவர்களுடைய உடல் பற்றிய அறிவை ஒவ்வொருவரும் பெற்றால் அவர்கள் பெற்ற புரிதல் உடல் நலம் காக்கும் செயலில் மிகப்பெரிய அளவில் உதவும். ஏனென்றால் உடலின் இயல்பான இயக்கத்திற்கு நம்முடைய புற மனம் மிகப்பெரிய குறுக்கீடுகளைச் செய்கிறது. மன இயக்கம் பற்றி தெளிவடைந்த நபர் அக மனம் ஏற்படுத்தும் உடல் பற்றிய

அச்சத்தை ஏற்காமல், அதை புற மனத்திற்கு மாற்றாமல் இருக்கமுடியும். புற மனதின் குறுக்கீடுகளை அவரால் வெற்றி கொள்ள முடியும். புற மனதில் உடல் பற்றிய அச்சம் இல்லாமல் போனால் உடல் தன் கடமைகளை தன்னியல்பில் செவ்வனே செய்கிறது. மனம் பற்றிய புரிதலை ஒவ்வொரு நபரும் பெற்று தன் அகத்தேடலுக்கு விடையையும், மனப்போராட்டங்களில் இருந்து விடுதலையையும் பெறமுடியும். அது போலவே அக மனத்தின் உடல் பற்றிய அச்சங்களை அங்கீகரிக்காமல் இருப்பதன் மூலம் உடல் நலத்தையும் பெற முடியும்.

மனநலமும், உடல்நலமும் இணைந்த ஒருவராக தெளிவடைந்த நபர் திகழும் போது, அவருடைய ஆன்மிக வாழ்வும், புற உலக வாழ்வும் பிரவாகமாக ஓடத்துவங்குகிறது.

உடல் பற்றிய புரிதலை நம் அன்பர்கள் மத்தியில் புதிய கோணத்தில் ஏற்படுத்த நாம் முயல வேண்டும். மேலுலகை வெற்றி கொண்ட நபர்களால் கீழுலகை சுலபமாக வெற்றி கொள்ள முடியும் தானே. நாம் சந்திக்கும் ஒரு நாளில் இது பற்றி மேலும் உரையாடலாம். நம் நண்பர்கள் கூடும் ஒரு சந்திப்பில் மனம், உடல் பற்றிய அதன் கூட்டு இயக்கம் பற்றிய புரிதலை ஏற்படுத்த நான் தயாராக இருக்கிறேன்.

கடிதம் எழுதுகிற போது அகத்தில் தோன்றுகிற வார்த்தைகளை நான் விரும்பினால் புறத்தில் எழுதுகிறேன். அப்படி ஒரு நீள் கடிதம் எழுதுவது போல என்னுடைய ஒவ்வொரு நாளும் கழிகிறது. தேவையான வார்த்தைகளை நான் அங்கீகரிக்கிறேன். தேவையற்றவைகள் தானே ஓடித் தீர்கிறது. இயற்கையின் ஒப்பற்ற சுழற்சியை உங்கள் வரிகளின் வழியாக நான் பெற்றதற்கு மகிழ்ச்சியடைகிறேன். புரிதலைப் பகிர்ந்திடுவோம் பலருடன். நன்றி.

அன்புடன்,
அக்கு ஹீலர் **அ. உமர் பாரூக்,** கம்பம்
விரிவுரையாளர், பெரியார் மணியம்மை பல்கலைக்கழகம்,
பாடத்திட்டக்குழு உறுப்பினர், தஞ்சை தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக்கழகம்
செல் : 9488870720, 94880110505

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு,

"ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள்" புத்தகம் படித்தேன். புரிதலுக்குப் பின்னரும், சில கேள்விகளுடனும், சஞ்சலத்துடன் இருந்த மனதை அய்யா அவர்கள், தனக்கே உரிய பாணியில் அடித்து நொறுக்கி இருக்கிறார்.

மிக அழுத்தமாக ஆணித்தரமான உறுதியுடனும் நம் சந்தேகங்களை நீக்கி விடுதலையில் நிலைக்க வைக்கிறார். பக்தி ரீதியாகவும், சாதனைகள் ரீதியாகவும், மன சரணாகதி அடையும் நிலை மிக மிக சிலருக்கே சாத்தியப்படும் இந்தக் காலத்தில், ஞான ரீதியான சரணாகதியை நம் எல்லோருக்கும் சாத்தியப்படுத்துகிறார். இந்த புத்தகத்தின் வாசிப்பிற்கு பின் ஞான விடுதலையை நான் மறுத்தாலும், அந்த மறுப்பும் பிரவாகத்தின் ஒரு பகுதியாக சென்றுவிடுகிறது.

அன்புடன்,
**O.K. விஜய்,** கோவை,
செல் : 98422-59235.

# ஜென் கதை

## தியானம்

"எனக்கு தியானம் கற்றுக் கொடுங்கள் குருவே!" என்று புதிய சீடன் ஒருவன் ஜென் குருவிடம் கேட்டான்.

"அப்படியா? சரி, என்னைப் பார்த்துக் கொண்டிரு, தியானத்தைக் கற்றுக் கொள்ளலாம்" என்றார் குரு.

அப்போது, குரு தோட்டத்தில் குழி வெட்டிக் கொண்டிருந்தார்!

இதையா பார்ப்பது? இதிலிருந்தா தியானம் கற்றுக் கொள்வது? என்று திகைத்தான் சீடன்.

சற்று நேரம் அவர் குழி வெட்டுவதையே பார்த்துக்கொண்டிருந்தான். எவ்வளவு நேரம் தான் பார்ப்பது? பொறுமை இழந்து விட்டான் சீடன்.

"சுவாமி, குழி வெட்டுவதையெல்லாம் நான் நிறைய பார்த்திருக்கிறேன். நானே கூட நிறையக் குழிகள் வெட்டியிருக்கிறேன். நான் இங்கே அதற்காக வரவில்லை. தியானம் கற்க அல்லவா வந்திருக்கிறேன்?" என்றான் சீடன்.

குழி வெட்டுவதை நிறுத்திவிட்டு, குரு தலை நிமிர்ந்து சீடனைப் பார்த்தார். "நான் செய்யும் செயலிலிருந்து நீ தியானத்தைக் கற்காவிட்டால், வேறு எப்படித்தான் கற்றுக்கொள்ளப் போகிறாயப்பா? செய்வதைக் கவனி! நான் எப்படிக் குழி வெட்டுகிறேன் என்பதைப் பார்!" என்றார்.

'நாம் தவறான ஆளிடம் வந்துவிட்டோமோ' என்று சீடனுக்குத் தோன்றியது.

"சுவாமி, நீங்கள் மகா பெரிய ஞானி என்று சொன்னார்கள். அதனால்தான் உங்களைத் தேடி வந்தேன். நீங்களோ குழி வெட்டுவதை கவனிக்கச் சொல்கிறீர்கள். குழி வெட்டுவதை எங்கேயும் கவனிக்கலாமே", என்றான் சீடன்.

"சரி, கவலைப்படாதே! பொறுமையைக் கடைப்பிடி! கொஞ்ச காலம் என்னுடன் தங்கியிருந்து பார்!" என்றார் குரு.

# ஜென் கதை 'தியானம்'

சீடன் அதற்குச் சம்மதித்து, குருவுடன் அந்த மடாலயத்தில் தங்கிக் கொண்டான்.

குரு தன் பாட்டுக்கு அன்றாட வேலைகளில் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். காலையில் எழுந்ததும் குளிப்பார். பிறகு தோட்டத்தில் குழிகள் தோண்டுவார். செடி, கொடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவார். பகல் முழுவதும் தோட்டவேலை தவிர அவர் வேறு எதுவுமே செய்யவில்லை.

வழிபாடு, பிரார்த்தனை, தியானம், படித்தல் என ஒன்றையுமே அவர் செய்யவில்லை. மற்ற சீடர்களுக்கு உபதேசம் கூடச் செய்யவில்லை. 'என்ன குரு இவர்' என்று சீடன் நினைத்தான்.

சில நாட்களில் அவனுக்குச் சலித்துவிட்டது. இவரிடமிருந்து ஞானம் எப்படித்தான் பெறுவது? குருவிடம் வந்தான். "சுவாமி, தியானம் கற்க அல்லவா நான் வந்தேன்? நீங்கள் செய்து கொண்டிருக்கும் செயல்களுக்கும், தியானத்திற்கும் எந்த ஒரு தொடர்பையும் காணோமே" என்றான் சீடன் வருத்தத்துடன்.

அதைக் கேட்ட குரு "நான் தியானம் என்று தனியாக எதையும் கற்றுத் தருவதில்லையப்பா, நான் குழி வெட்டுவதைப் பார்க்கும்போது, மனம் அலைபாயாமல் முழு கவனத்துடன் எப்படிக் குழி வெட்டுகிறேன் என்பதை நீ தெரிந்து கொள்ளலாமே. நான் உணவு உண்ணும்போது எந்த வெளிக்கவனமும் இன்றி தியானத்துடன் எப்படிச் சாப்பிடுகிறேன் என்பதைத் தெரிந்து கொள்ளலாமே. நான் தனியாக தியானம் என்று எதுவும் செய்வதில்லை. நான் செய்வதெல்லாமே தியானம் தான்" என்றார் குரு.

சீடன் "குருவே நான் மனதைத் தூய்மைப்படுத்தி விடுதலை பெறவே தியானம் கற்க வந்தேன். ஆனால் நீங்கள் கூறுவது எனக்குப் புரியவில்லை. கொஞ்சம் விளக்கமாகக் கூறுங்கள்" என்றான்.

குரு அமைதியாக கூறினார், "நீ வேறு, உன் மனம் வேறா? எல்லாம் ஒன்றுதான். நீ மனதை தூய்மைப்படுத்தி விடுதலை அடைவது என்பது, உன் முதுகை நேரடியாக தேடி காண முயல்வது போன்றது. எத்தனை முறை தேடி சுற்றினாலும் முடியாது. ஆனால் தேடினாலும் தேடாவிட்டாலும் அது உன்னிடம் உள்ளது. அதை புரிந்துகொண்டால் போதும். அதை தேடுவதை விட்டுவிட்டு உன் வெளி வேலையில் கவனம் செலுத்து. அதுதான் தியானம் என்றார்". சீடன் உண்மையைப் புரிந்து கொண்டான்.

"புரிந்து கொண்டபிறகு நம் கைவசம் இருப்பது நமது செயல், செயல், செயல் மட்டுமே".



**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*
Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.